எட்டாம் பாட்டில் (13) "நம் கண்ணழகு உண்டாகில் தானே வருகிறான்" என்று அவயவசோபையை மதித்துக்கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால் பகவதநுபவபரிகரமான ஜ்ஞாந வைராக்ய பக்திகளால் பூர்ணரா யிருக்குமவர் திறத்திலும், ததர்த்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸாபேக்ஷரா யிருக்கை ஸ்வரூபமென்கிறது.

ஒன்பதாம் பாட்டில் (14) எல்லார்க்கும் தானே நிர்வாஹகையாய், எல்லாரையும் தானே எழுப்பக்கடவளாகச் சொல்லி விஸ்மரித்துக்கிடக்கிறாளொ ருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்விஷயத்தில் மூட்டுகையாலே அதிகரித்த நிர்வாஹகர் முன்னாக பகவதநுபவம் பண்ணுகை ஸ்வரூபமென்கிறது.

பத்தாம் பாட்டில் (15) எல்லாருடைய திரட்சியும் காணவேண்டியிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், ஸ்ரீவைஷ்ணவஸமாஜ தர்ஶனம் அபிமதமாயிருக்குமவர்களைக் கண்டால், அந்த ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபமென்கிறது.

ஆக, இப்பதினைந்து பாட்டாலும், எழுப்பப்பட்டவர்களெல்லாரும் கூடவந்து, மேல் பதினாறும் பாட்டில் ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையிலே சென்று கோயில் காப்பானையும் திருவாசற்காப்பானையும் எழுப்புகிறார்கள்.

பதினேழாம் பாட்டில்:— இவர்கள், திருக்காப்பு நீக்கி உள்ளே புகவிட, ஸ்ரீநந்தகோபர் தொடக்கமான உள்ளுள்ளாரையடைய எழுப்புகிறார்கள். இவ் விரண்டு பாட்டிலும், பகவத்விஷயத்தைக் கிட்டுவார் தத்ப்ரத்யாஸந்நரைப் புருஷகாரமாகக்கொண்டு புகுருகை ஸ்வரூபமென்கிறது.

பதினெட்டாம் பாட்டில்:— இப்படி எழுப்பினவிடத்திலும் எழுந்திராமை யாலே, தங்களுக்குப் புருஷகாரமாக நப்பின்னையை எழுப்புகிறார்கள். இத்தால் பகவத்விஷயீகாரம் பிராட்டி புருஷகாரஸாபேக்ஷமென்கிறது.

பத்தொன்பதாம் பாட்டில்:—இவள் திறக்கப்புக, "நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது" என்று இவளைத் திறக்கவொட்டாதே கட்டிக் கொண்டுகிடக்கிற க்ருஷ்ணனை எழுப்பி, மறுமாற்றம் கொள்ளாமையாலே மீளவும் அவனையுணர்த்துகைக்காக அவளையெழுப்புகிறார்கள். இத்தால், பிராட்டி யைப் புருஷகாரமாக வரித்தால், அவனும் இவளும் இசலி இசலிப் பரியும் பரிவைச் சொல்லுகிறது.

இருபதாம் பாட்டில்:—"அவனுக்கும் எங்களுக்கும் அடியான நீ எங்களை நீராட்டுவீ" என்று க்ருஷ்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும்கூட எழுப்பு கிறார்கள். இத்தால், அடிமைசெய்யுமிடத்தில் இருவரும் சேர்ந்த சேர்த்தியிலே அடிமைசெய்வதே முறை என்கிறது.

இருபத்தோராம் பாட்டில், நப்பின்னைப்பிராட்டியும், ''நானும் உங்களிலே ஒருத்தியன்றோ? நாமெல்லாருங்கூட க்ருஷ்ணனை அர்த்திக்கவாருங்கோள்'' என்ன; அவன் கு₃ணங்களிலே தோற்றார் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள். இத்தால், ப்ரபு₃த்₃த₄னாய் தங்கள் காரியம் செய்கைக்கு, A''ஏத்தவேழுலகம்கொண்ட'' என்கிறபடியே, ஆஶ்ரிதரானவர்களுக்கு நிர்மமராய்க்கொண்டு அவன் கு₃ணகீர்த்தனம் பண்ணுகை கர்த்தவ்யம் என்கிறது.

இருபத்திரண்டாம் பாட்டில்:—கீழ்ப்பாட்டிலே தங்கள் அபி₄மான ஶூந்யதையைச் சொல்லி, இப்பாட்டில் அநந்யார்ஹஶேஷத்வம் சொல்லுகிறது. இத்தால், அவனுடைய விஶேஷகடாக்ஷத்துக்குத் தங்கள் அநந்யார்ஹஶேஷத்வம் அநுஸந்தே₄யமென்கிறது.

இருபத்துமூன்றாம் பாட்டில்:—1. ''உபஸ்தே₂யைருபஸ்தி₂த:'' என்று ''ஶ்ரீத₃ண்ட₃காரண்யத்தில் ரிஷிகளுடைய து₃:க்க₂ நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப்பெற்றிலோம்'' என்று வெறுத்தாப்போலே, ''இவர்கள் நோவுபடப்பார்த்திருந்தோமாகாதே'' என்று இன்னாதாய், அவர்களை அழைத்து 'செய்யவேண்டுவதென்?'' என்ன; ''இங்ஙனே சொல்லவொண்ணாது; பேரோலக்கமாக இருந்து கேட்டருளவேணும்'' என்கிறார்கள். இத்தால், ''கர்மபரதந்த்ரராயிருந்துள்ள ப்ரயோஜநாந்தரபரரைக் காட்டிலும், அநந்யப்ரயோஜனராய் ஸாத₄நாந்தர நிஷ்டராயிருக்குமவர்களிற்காட்டிலும், ஸித்₃த₄ஸாத₄னம்பண்ணினார்க்குத் தந்தாம் கையில் கைம்முதல் இல்லாமையாலே ஈஶ்வரனே ப்ரபு₃த்₃த₄னாய்க்கொண்டு அபேக்ஷிதஸம்விதா₄னம் பண்ணவேணும் என்று இவ்வதி₄காரத்தில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது.

இருபத்துநாலாம் பாட்டில்:—''அப்படியே செய்கிறோம்'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடியைக்கண்டு, தாங்கள் வந்த காரியத்தை மறந்து, தத்காலீநமான அழகிலே ஈடுபட்டு மங்க₃ளாஶாஸனம் பண்ணுகிறார்கள். இத்தால், அர்த்திகளாய்ச் சென்றால் தந்தாமுடைய புருஷார்த்த₂த்தை விஸ்மரித்து மங்க₃ளாஶாஸனம் பண்ணவேண்டும்படியான விஷயவைலக்ஷண்யம் சொல்லுகிறது.

இருபத்தஞ்சாம் பாட்டில்:—ஏதேனும் இப்ரவ்ருத்திக்கொரு ப்ரதிப₃ந்த₄கமுண்டேயாகிலும், நீயே போக்கி எங்கள் து₃:க்க₂மெல்லாங்கெட விஷயீகரிக்கவேணும் என்கிறார்கள். இத்தால், ஸ்வரூபலாப₄ம் அத்தலைக்கே கூறானவோபாதி, து₃:க்க₂நிவ்ருத்தியும் அத்தலைக்கே ப₄ரம் என்னும் இவ்வர்த்த₂ம் சொல்லுகிறது.

இருபத்தாறும்பாட்டில்: — ''மற்றபேக்ஷிதமென்?'' என்ன, நோன்புக்கு வேண்டும் உபகரணங்களைத் தரவேணுமென்கிறார்கள். இத்தால், து₃:க்க₂நிவ்ருத்தியோபாதி, பே₄ாசே₃ாபகரண ஸித்₃தி₄யும் அவனாலே என்கிறது.

A திருவாய் 2-2-11.